ப்பதனம்பண்ணு,காரப்பாகுருபதத்தைக்குணமாய்ப்போற்றி கற்பூரதீப மதிற்கருத்தைக்கவைத்து,சாரப்பாமதியமுதப்பானம்பண்ணு சதாபோதை சிவயோகமாகுந்தானே. ௮௮௰

கெற்பவியாதிபோக.

நாமென்றகெற்பநோய்தீர்வதற்குத் தயவானகருவொன்றுசொல்லக்கேளு, ஆமென்றசருகெடுத்துக்கருக்கிமைந்தா வுண்மையுடன்சிறுநீரிற்பிசைந்துருட்டி,வாமென்றாலிகனிமேலகாயப்போடு மார்க்கமுடனிப்படியேபத்துமுறைபண்ணு, கோமென்றஅமுரியிலேகரைத்துமைந்தா குருமையுடன்றெளிவிறுத்துசவியின்வையே. ௮௮௧

வைக்கவேயுப்பதுவுப்படாருப்பாரு வரிசையுடன்பனைதாமெடுத்துமைந்தா, கைக்கவேபிங்காணிற்பதனப்பண்ணி தாமணியிற்பெண்களுக்குக்கெற்பநோய்தான், மயக்கவேவந்துசென்னவென்றால்மைந்தா தன்மையுடன்றுவாகுட்நாளிற்றானே, மயக்கவேமாப்பண்டப்பால்பழத்தினுமேல வந்துகடாருகைத்தின்வாய்வுதானே. ௮௮௨

தாமென்றகருக்குழியில்வாய்வுதங்கி தளர்ந்தகொருசோணையினால்தசைதான்மூடி, ஊமென்றதேகமெல்லாமகர்த்துநல்ல வுண்மையுள்ளஅடிவயிற்றில்வலியுண்டாச்சு, பாமென்றகருக்குழிதான்விளக்கமன்றி பசுமானவிருதுவங்கேஅறுகாதையா, ஏமென்றாலதியிலேவாய்வுகொண்டு இருந்ததினால்கெற்பமது இல்லைதானே. ௮௮௩

கெற்பவாய்வுக்குஉப்பு.

தானப்பாகெற்பமதில்வாய்வுபோக தயவாசமூன்சொன்னவுப்பைமைந்தா, தேனப்பாஅதில்நூறுக்கிக்குழப்பியுண்ண சேடத்திலுள்ளமலசலங்கள்சேரப்போகும்,காணப்பாகெற்பமதில்வாய்வுபோகும் சருவானகருக்குழியும்விளக்கமாகும், கோணப்பாகுருவருளால்கெற்பமுண்டாம் கூறுகிறேனின்னமொருபாகங்கேளே. ௮௮௪

கெற்பமுண்டாகஎண்ணெய்.

சேளப்பாதேங்காய்பால்பஞ்சள்பாலுங் கெடியானநதவேளைவிழிச்சாறும், நாளப்பாவிலவாரைச்சாறுங்கூட்டி நன்மையுடன்வகைக்குஒருபடியாய்வாங்கி,ஆளப்பாபாண்டத்திலிட்டுநல்லஅன்பானவிளக்கெண்ணெப்படியேவார்த்து,மேலப்பாஇடுமருந்தைவகையாய்க்கேளு மேன்மைதிரிகடுகுதிரிபலையிந்துப்பே. ௮௮௫

உப்பதுவுங்கால்பலந்தான்வாங்கிநல்ல வுடன்சேர்த்தமருந்துஅரைபலமாய்வாங்கி,செப்பவேபெருங்காயம்விராசன்பத்து சேரவேபொடித்தந்தஎண்ணெய்தனில்கலக்கி,தப்பாமலடுப்பேற்றிமெழுகுபதந்தனில் தயவானகுருப்போட்டுவடித்துமைந்தா, அப்பாகேள்பதனமதாய்வைத்துக்கொண்டு அதின்விபரஞ்சொல்லுகிறேன்மைந்தாகேளு. ௮௮௬

கேளப்பாவிலக்கமுள்ளமூனுநாளுந் தெளிதமுடன்படியளாக்கால்வீதங்கொள்ளு, நாளப்பாமூன்றுநாள்கொண்டபோது நலமில்லாசித்த

மொடுமேல்கட்டெல்லாந், தாளப்பாசமூன்றுவிடும்வாய்வுபோகுந் தருகாத
வயிற்றுவலியுடனேநிற்கும், ஆளப்பாமறுகுநகமில்லையில்லை அரகராகெ
ற்பமதுவுண்டாம்பாரே. ௮௮௭

பாரப்பாவுலகத்தில்மலைபோயில்லை பக்குவமாய்செய்தோர்க்குஎல்லா
ஞ்சித்தி, காரப்பாகுருபதத்தைத்தொண்டுபண்ணு காயாகிகற்பமதைமற
ந்திடாதே, ஆரப்பாவுனக்கீடுஆகிகற்பம் அனுதினமும்நேசமுடன்பூசை
பண்ணு, வீசப்பாசெய்யாமல்மனநடக்கிநில்லு விண்ணுணகண்ணொளி
யைமேவிப்பாரே. ௮௮௮

பாரப்பாபதிதலத்தில்மதியொடுங்கி பாகைனேசவிபெருக்கிலமுதஞ்
சிந்தும், ஆரப்பாவுனக்கீடுஅமுதங்கொண்டு அன்பானபூரணத்தைஅறி
வார்பாரு, தேரப்பாஇந்நூலைப்பதனம்பண்ணு செகத்தோர்க்குஇந்நூலை
ச்செப்பவேண்டாம், காரப்பாயன்னிரண்டுநூறைமைந்தா கண்ணிமைக்
குள்வைத்ததனைப்பதனம்பண்ணே. ௮௮௯

குஷ்டத்துக்குத்தயிலம்.

புண்ணப்பாகுஷ்டமொடுகெறப்பான்போக பண்பொன்றுசொல்லு
கிறேன்மைந்தாகேளு, நண்ணப்பாபரங்கியுடபட்டைவாங்கி நலமானபழ
ச்சாற்றிலூறப்போட்டு விண்ணப்பாவிடவேயுலரப்போட்டு விசையா
கஇப்படியேபத்துமுறைபண்ணு, தண்ணப்பாநன்றாகவுலர்ந்தபின்பு தாக்
கிநன்றாயிடித்துவடிக்கட்டுவாயே. ௮௯௦

கட்டாகச்சிவனார்தன்வேம்பைவாங்கி கண்டமதாய்நறுக்கிகுழித்தை
யிலம்வாங்கி, திட்டமதாய்தயிலமதில்பட்டைத்தூளுஞ் சேர்த்துநன்றாய்
ப்பிசைந்துருட்டிவைத்துக்கொண்டு, மட்டாகநெல்லிக்காயளவுகொண்டா
ல் மாறாதசிரங்கியொடுகுலைப்புண்கள், தொட்டவுடனோடுகின்றகுஷ்ட
ரோகஞ் சொறிசிரங்குபெருஞ்சிரங்குஇன்னங்கேளே. ௮௯௧

கேளப்பாமேல்புற்றுவெடிப்புவெடிவெள்ளை கோதசெவிப்படை
ப்புழுக்கடைப்பு, தாளப்பாதேகத்தால்வந்தரோகந் தருநாமலோடிருப
துநாட்கொண்டால், சேளப்பாஒன்றிலைமுப்பூவுஞ்சேர்த்து குணமாகக்
கொண்டவுடன்குடிலதீங்கும், நாளப்பாநாளுக்குநாளேதேகம் நன்றாகக்
காணுமடாநமனோடானே. ௮௯௨

சொறிசிரங்குதயிலம்.

நாடாமலின்னமொருதயிலம்சொல்வேன் னைமானமேதங்காய்ப்பால்ப
டிதான்வங்கி, வாடாமல்தூரிசிஅரிதாரங்கெந்தி வகைபொன்றுக்குருகுழி
ஞ்சிவாங்கிமைந்தா, தேடாமலுனைத்தப்பால்சனிற்சலக்கி செம்மையுடன்
காய்ச்சியன்னைநதிரமாய்வாங்கி, ஆடாமலென்னைதனைவைத்துக்கொண்டு
அப்பனேமுற்குருவில்சமூஞ்சிகேளோ. ௮௯௩

சேர்த்ததொருஎண்ணைதனைவைத்துக்கொண்டு தேகமதிலுறுங்கட
விசாயுங்காலப், பார்த்தல்லோ அரைப்பிட்டுகுளித்தாயானால் பறக்குமடா
சொறிசிரங்குபுங்கிகுஷ்டம், மாற்றுமேல்புற்றுவெள்ளையண்டு மாறு

பூரணமுஞ்சொன்னேன், சேப்பாசௌமியசாகரத்தில்நன்றாய் நிறைந்த பொருள்வெளியாகப்பாடினேனே. ௯௩௰

பாடினதோர்சாத்திரங்களையெல்லாம்பார்த்து பக்குவமாய்ப்பன்னிரண்டுநூறாய்ப்பாடி, நாடினதோர்சாலவித்தைநன்றாய்ச்சொன்னேன் நலமானகருக்களெல்லாம்வெளியாய்ச்சொன்னேன், தேடினதோர்மந்திரங்கள்திறமாய்ச்சொன்னேன் திறமாகவசியமுதல்மார்க்கஞ்சொன்னேன், ஆடினதோரஞ்சனமும் வாடைசொன்னேன் அஷ்டமாசித்துமிகஅறிவித்தேனே. ௯௩௧

அறிவித்தேன்சகலசித்துமாடவேணும் அன்பானபுலத்தியனேயுனக்குச்சொன்னேன், நிறுவிக்கசமாதிகற்பாவகையாய்ச்சொன்னேன் நிச்சயமாய்வாதமதுநிலைக்கவேணப்பா, கருவித்தநிந்நூலைப்பதனம்பண்ணிசதாகாலம்பூரணத்தில்சார்ந்திலது, கருவித்துகருவறிந்துசெய்யவேணுங் காலறிந்தியோகமதில்கருத்தாயூணே. ௯௩௨

சிவவேடம்.

ஊணடாசிவவேடமார்க்கந்தன்னை உறுதியாய்ச்சொல்லுகிறேனுனக்காய்மைந்தா, காணடாஜெபமாலை அன்பத்தொன்று கணக்காகருத்திராட்சங்கைபிணைந்து, தானடாயோகதெண்டு அளவைநேரு நனகாக அணிவிநல்புப்பத்திரண்டு, பேணடா அளவாகச்செய்துகொண்டு பேணியேகைதனிலேயெடுத்துக்கொள்ளே. ௯௩௩

கொள்ளடாவிபூதியுத்தளமாய்ப்பூசி கொண்டபின்புவேட்டியுடனவைத்தேகேளு, நல்லடா அகலமதுமூன்றுமுழமாகும் நலமானநீளமது ஆறுமுழமாகும், உள்ளடாபீனஞ்சணைகலங்கூட்டி உத்தமனேநீளமதுநாலசாணாகும், அள்ளடாகாவியிலேநீர்க்காவியாகும் அகாசிவவேடமகிமைதானே. ௯௩௪

தானென்றவேடமதையறியாமாண்பர் சந்நியாசிகாவியைத்துவைத்துப்போர்த்து, விளைக்குறட்டதனைக்காலிற்போட்டு மெய்நிறையவிபூதியைத்தானணியக்கப்பூசி, நானென்றஆணவத்தால்மதமேபேசி நல்மானைப்பூரணக்கதைத்துப்பேசித்தான், கோனென்றகுருவறியாகுருட்டுமட்டை குவலயத்தில்வேடமிட்டுஏங்கிறேனே. ௯௩௫

எங்கேயுலகரிடம்வாய்வீண்பேசி வயிறுபசிபொறுக்காமற்றான், தாங்கியேபொய்பேசித்திரிவார்மெத்த தயவானவாலையென்றுசாராயத்தை, வாங்கியேகுடித்துமதிகெட்டுப்போவான் மார்க்கமுடன்கள்ளுண்பான் சஞ்சாரிப்பான், ஏங்கியேவாய்புலம்பித்திரிவானையா சுகமானபூரணத்தையறியான்காணே. ௯௩௬

தானென்றதத்துவத்தின்செயலைக்கண்டு சர்வாகமூலமதில்மனதைவைத்து, கோனென்றகுருபதத்தில்சேர்ந்துக்கொண்டு குணமானநேசகபூசையும்பண்ணி, மானென்றகும்பகத்தில்நின்றுமைந்தா மருவியேபூரணத்தைமனதாய்க்கண்டு, தேனென்றஅமுதரசங்கொண்டால்மைந்தா சிவசிவாகைலாசத்தேகமாமே. ௯௩௭

இல்பதியவைத்து, நெகிழாமல்மனதுறுதியாகக்கொண்டு தேசமுடனிருந் திருப்பீர்மைந்தகேளு, அகளாதருண்பமுதல்குஷ்டரோகம் வசடானதீ ழிவுகாசம்போமே. ௧௩௨

காசமொடுபவுத்திரங்கள்தசைரோகமெல்லாஞ் சதிகெட்டுதுபோடர்இ ன்னங்கேளு, ஆதேசமுடன்செந்தூரப்பணவிடைதானெடுத்து தேனிலாக வெல்லமதிற்கொண்டாயாகில்,பாசமுடன்சுயமிளைத்துபோடிப்போகும் ப ண்பானமுறைகாச்சலோடிப்போகும்,வாசமுள்ளதேனதிலேகொண்டால் மைந்தா மயக்கமென்றநெஞ்சடைப்புவாங்கிப்போமே. ௧௩௩

போமப்பாமூலப்பாவில்பணவிடைசெந்தூரம் புகட்டியேகொண் டிருமென்மைந்தாகேளு, ஆமப்பாதோஷமொடுசுவாசந்தீரும் அடங்காத நாவரட்சிவிட்டுப்போகும்,காமப்பாபறங்கிமுதல்கறுப்பான்தீரும் கடிப்பா னவெளுப்புடனேபறங்கிதீரும், நாமப்பாசெந்தூரத்திக்கெய்த்த கலமான புண்ணியங்களில்லைதானே. ௧௩௪

தானென்றசெந்தூரந்தினமுங்கொண்டால் சடமென்றகூடுதா ன்பிலைக்குதப்பா, நானென்றஅவமிருத்தோடிப்போகு நரைதிரையுமற்று நடாங்கவுறுவிரில்லை,தேனென்றஅனுபானமறிந்துகொண்டால சிவசிவாசயி லாசதேகமாகும், ஊனென்றவுடம்பெடுத்தாலுறுதிவேணும் உழன்றும லந்திரிக்கதகுற்றளர்ந்துபோமே. ௧௩௫

தளராமலிருப்பதற்கின்னமொன்று சாற்றுகிறேன்புலத்தியனேதய வுள்ளானே,யுளராமற்செந்தூரப்பணவிடைதானெடுத்து வுண்மையென் றமுப்பூவில்விடைதான்கொண்டு, தளராமல்மனதுறுதியாகிக்கொண்டா ல் கழனுமடாசட்டையொன்றுகறுப்பாய்த்தானே, வளருமடாதேகமது வெளிபோற்காணு மகத்தானதேகமதுபிர்மமாமே. ௧௩௬

ஆமப்பாசித்தாந்தம்ஞானமார்க்கம் அப்பனேவேதாந்தம்யோகமார் க்கம்,தாமப்பாஞானவரையோகத்துக்கு தயவானமூலமடாநந்திநந்தி, காம ப்பாநந்தியடிமூலங்கண்டால்நடலாயாறுவகையதின்மேலப்பா;காமப்பா காணப்பாவிரண்டுங்கூடி கனகாசைப்பூரணமாய்நிற்குந்தானே. ௧௩௭

சுவாசத்துவஸ்பம்.

தானென்றசுவாசத்துபலந்தானொன்று தயவானபொரிக்காரப்பலந் தானொன்று,ஆனென்றபழச்சாற்றால்கலவத்தாட்டி உறுதியுடனேட்டிநன் றாய்வழித்துக்கொண்டு,பானென்றவிழுகதிலுலர்த்திமைந்தா பக்குவ மாய்புடம்போடபற்பமாகும்,தேனென்றபற்பமதுபதனம்பண்ணிதேனை திலேபணவிடைதான்கொள்ளச்சொல்லே. ௧௩௮

சொல்லப்பாநீரடைப்புபிறமேகந்தான் குழந்தைகோதமுடனே வெட்டைபோகும், கல்லப்பாகல்லடைப்புதசையடைப்பு நன்மையில்லா மேகத்தாலெழுந்தநோய்கள்,அல்லப்பாவோடிவிடும்பின்னுங்கேளு ஆயரா நீர்க்கடுப்புநீர்ச்செரிப்பு, சொல்லாபவோடிவிடும்பின்னுங்கேளு சிவசிவாயு [illegible]ரியங்களில்லைதானே. ௧௩௯

அப்பிரகச்சத்து.

காவென்றஅப்பிரகச்சத்துசொல்வேன் சதுவானஅப்பிரகம்பொடி
தான்செய்து, வாவென்றபலபொன்றாவிக்துக்கொண்டு மைந்தனேமே
ல்மருந்தின்வகையைக்கேளு,ஆவென்றவெடியுப்புகாரசாரம் உத்தமனே
காளகமும்செவுரிகுதம், மாவென்றசிங்கியுடபூநாகந்தான் மைந்தனேவ
கைவகைக்குக்கழஞ்சிவாங்கே. ௬௱

வாங்கடாமுப்பூவுங்கழஞ்சிகொண்டு வரிசையாய்மருந்தெல்லாங்க
லவத்திட்டு, தாங்கியேபழச்சாற்றாலாட்டி மைந்தா தயவாகஇருசாமம்நன்
றாயாட்டி, பாங்குபெறப்பில்லைசெய்துலியிற்போடு பக்குவமாய்வச்சிர
மங்குகையில்வைத்து,சாங்கமாய்சில்லிட்டுசீலைசெய்து தயவாகக்குகைய
மூசலூதுதே. ௬௱௧

ஊதியபின்குகையாறியெடுத்துப்பாரு உத்தமனேசயமதாயுருகியி
ற்கும், வாதியென்றவைகிகோகாணப்போருர் மகத்தானயோகியடாசத்
துகாண்பான், ஆதியென்றஅப்பிரகச்சத்தானவோரசாரவாதிகள்தானலை
ந்தேதெசைந்தார், சோதியென்றஅப்பிரகச்சத்தைமைந்தா சிதமாகச்செந்தூ
ரம்பண்ணுபண்ணே. ௬௱௨

பண்ணப்பா அப்பிரகச்சத்துவாங்கி பலமெடுத்துகுகைதனிலேயுரு
குப்போது,வண்ணப்பா தங்கமொருபலந்தான்சேர்த்து உருகிமெண்டுங்கு
ண்டாகிமணிபோலிருக்கும், கண்ணப்பாகல்வத்திற்பொடிக்கத்தூளாங் க
ண்டிடைக்குவீரமொருகத்தேறு, அண்ணப்பாகண்டிடைக்குகெந்திக
ட்டி அழகானபழச்சாற்றலாட்டிப்பாரே. ௬௱௩

பாரப்பாபழச்சாற்றலாட்டிப்பின்புபண்பானபொடுதலையின்சாற்று
லாட்டி, காரப்பாவெண்டுதளாத்தபின்புசநயமாகப்பொடிசெய்துகுப்பிக்
கேற்றி, சாரப்பாமண்சீலையேழுஞ்செய்து தன்மையுடன்காய்ந்தபின்பு
சொல்லக்கேளு,சீரப்பாமுன்போலெரித்துப்பாரு சிவசிவாசெந்தூரஞ்
சிவப்புத்தானே. ௬௱௪

தாவென்றசெந்தூரம்பதனம்பண்ணி தன்மையுடன்பணவிடைதா
ன்தேனிற்கொண்டால், ஊவென்றகாயமதுபிலத்துநல்ல வுறுதியாய்ச்ச
ட்டையுண்டுதள்ளுந்தள்ளும், தேவென்றகற்பமடா செந்தூரந்தான் இர
மாணஅனுபானமறிந்துகொண்டால், மோவென்றமோகம்போங்குலைபோ
கு மக்களேமுந்நூற்றைமகிழ்ந்துகேளே. ௬௱௫

கேளப்பாமுந்நூற்றில்செந்தூரமார்க்கம் கிருபையுடனிருநூற்றின்
பற்பஞ்சொன்னேன்,தாளப்பா ஆயிரத்துநூற்றில்மைந்தா நன்மையுடன்
வயித்தியத்தில்நன்றாய்ச்சொன்னேன்,வேளப்பா அறுநூற்றின்விபரமெ
ல்லாம் விரித்துநன்றாய்சொல்லிவிட்டேன்விபரமாக, ஆளப்பா நூற்றில்வ
யித்தியபூரணந்தான் அன்பாகப்பாடினதைநன்றாய்ப்பாரே. ௬௱௬

பாரப்பா அப்பிரகச்செந்தூரத்தை பாச்சடாவெள்ளியிலேநூற்றுக்
கொன்று, சேரப்பாமாற்றதுவுமுன்னூறுகும் இரமானகுடவனிலேயிரு

றாகுஞ் சாரப்பா வெள்ளிசெம்பில் நூறுமாற்று தயவாகத்தனிச்செம்பிலைப்பதாகும், ஆரப்பா அறிவார்கள் செந்தூரப்போக்கு அன்பானபுலத்தியனேயின்னங்கேளே. ௯௬௭

பொன்னிமிளைச்சத்து.

கேளப்பா பொன்னிமிளைச்சத்துசொல்வேன் செடியானநிமிளையது பலந்தான்வாங்கி. நாளப்பா சோமனது இடையேசுற்றி நன்றாகக்காரபற்ப நாகபற்பம், மேளப்பா நிமிளையின்மேல்பூசிக்கொண்டு மேலாகசோமத்தைச்சுற்றிமைந்தா, காளப்பா அதின்மேலேமுப்பூச்சுண்ணந்தயவாகப்பூசிநல்லருகைக்குள்வையே. ௯௬௮

வையப்பா குகைவாயைமூடிநன்றாய் மார்க்கமுடன்மூசையிலேவைத்தூது, மெய்யப்பா சொல்லுகிறேன்குகையுருகவூது மெய்யானசத்ததுவும் வெண்கலமாய்நிற்கும், பையப்பா அறவிட்டிச்சத்தைவாங்கி பாலகனே குகையிலிட்டுகாரமூட்டி, கையப்பா உருக்கிப்பார்கண்விட்டாசிம் நன்றாக அதில்சேரும்வகைகளையக்கேளே. ௯௬௯

கேளப்பா நாகமொடுதங்கம்ரெண்டும் செடியானசத்துருக்குச்சரியாய்த்தூக்கி, வாளப்பா சத்துநின்றுவருகும்போது வரிசையாய்நாகதங்கமிதிலேயூட்டி, தாளப்பா சத்துடனேரெண்டுஞ்சேர்த்து தயவாகமூன்றுமொன்றாயுருகுமப்பா, ஆளப்பா குகைமாறியெடுத்துப்பாரு அரகாரகளங்காருமைந்தா கேளே. ௯௭௦

கேளடா களங்கதனைக்கலைத்திட்டு செட்டியாபாடைத்திடவேதூளாம்பாரு, வாளடா விமதுபலந்தான்மூன்று மைந்தனே வாலைரசம்பலந்தான்மூன்று, தேளடா வெந்திபலம்நாலுங்கூட்டி தெளிட்டாகத்துத்தியங்கப்பலமூங்கூட்டி, ஆளடா மூலைப்பாலால்நன்றாயாட்டி அதின்பிறகு பொடிதனையின்சாற்றாலாட்டே. ௯௭௧

ஆட்டியே உருத்துருட்டிக்காயப்போட்டு அப்பனே பொடிசெய்து குப்பிக்கேற்றி, நாட்டியே வாலுகையில்மூன்றுநாள்தான் நலமாகமுத்திபும் நன்றாய்மூட்டி, காட்டியே சலாகைகொண்டு சோதிச்சேபார் கதிர்முனையில் ஒறகுறக்குப்பதக்கானப்பா, தாட்டிகமாயாறவிட்டு உடைத்துப்பாரு சார்ந்ததானபொன்னிமிளைச்செந்தூரமாச்சே. ௯௭௨

ஆச்சப்பா செந்தூரம்பதனம்பண்ணி அப்பனேகுன்றியிடையிருபோதுண்ணு, காச்சப்பா பசுவின்பால்தன்னிற்கொள்ளு கதிரோனிட்டம்தேகமது காந்தியாகும், மீச்சப்பா மூலைப்பாலிற்குன்றிய கோணத்தாலும்போம் சுவாசம்போகும், பாச்சப்பா விக்கல்கள்குஷ்டரோகம் பாகையானமேகமென்றதெல்லாம்போமே. ௯௭௩

போமடா வாதத்தில்வழுந்ததோஷம் பொல்லாதபித்தத்தால்வழுந்ததோஷம், ஆமடா சிலேற்பனத்தால்வழுந்ததோஷம் அஞ்சாததோஷமெலாமகன்றுபோகும், சாமடா நிமிளைதன்னைக்கண்டோர்களுண்டோ தனத்திலே ஓடிவிடுமையாவையா, நாமடா உரைத்ததுக்குசொன்னேனையா நலமாகச்செந்தூரத்தொழிலைக்கேளே. ௯௭௪

னைத்திடவேயபிறுவையதாபின்னை, காலப்பாமாறியவன்கடனைச்செய்வா ன் கண்டின்னமிழாதேகருத்தாய்நில்லே. ௯௮௨

நில்லென்றகுடவழிமேலாற்றுக்கொன்று நீட்டிறுவல்பத்தனைதான் தப்பாதண்மை, சொல்லொன்றுதப்பாதுகருவசைப்பாரு சொல்மறந்து பார்த்திறுக்கோதிகாறாய், கல்லென்றகல்லெறிந்துபுல்லைத்தின்னு கால நிற்றுயோகமதிற்கருத்தாய்நில்லு, கொல்லென்றுவாய்பசப்புங்குறும்ப ரோடே கூடாதுவாசியிலேகூர்ந்துநில்லே. ௯௮௩

நில்லடாவாசியிலேநின்றுதேறி நினைவாகப்பூரணத்தைக்கண்டுபூசி, சொல்லாதமந்திரத்தையுருவேசெய்து சோராமற்கனியருந்திமணியைப் பூசி, கள்ளடாதனையறியார்தன்னைத்தானே சமையமதக்கொண்டாடுந்த வத்தோர்தன்னை, புல்லென்றமனுக்களுடன்பொருந்தவேண்டாம் பூரண த்தைத்தினநோக்கிப்பூண்டுநில்லே. ௯௮௪

## நாகச்செந்தூரம்.

பூண்டுக்கொள்நாகச்செந்தூரந்தன்னை பூரணமாய்நாவிற்றுதெளிந் தகண்ணீர், ஆண்டுகொண்டுவுச்சலத்தில்நாகஞ்சாய்க்க அப்பனேசிறடங் கிடடத்தக்கட்டும், கண்டதொருதுளைதனிலேநாகம்போட்டு நினைவாகவு ருகையிலேமைந்தாகேளு, பண்டதொருநாகத்துக்கிடையேதங்கமகத்தா னதுங்கறித்தைகவாமே. ௯௮௫

வார்த்துமிகவுருக்கையிலேமூன்றுமொன்றாய் வளமாகவுருகியதும மணிபோல்விக்கும்பார்த்துமிகத்தாமெடுத்ததாக்கலைத்திட்டு பதறுபலத்தி னைடைக்குமியஞ்சேர்த்து, பொற்பிசன்றுமிடைக்கிரட்டிசெகஇகட்டி பொடி செய்தானைகுத்தலைதாக்கொண்டு, காற்றுமிகக்குப்பிதனிலேற்றிக் கொண்டு கனமாகவண்டியிலேவதுவாய்ச்செய்கே. ௯௮௬

செய்யப்பாவாலுகையில்முன்போல்வைத்து திடமாகஅறுசாமமெரி த்தானந்து, பையப்பாஆறவிட்டெடுத்துப்பாரு பவளசெந்தூரமென்ன சொல்லேன், மெய்யப்பாசெந்தூரம்பதனம்பண்ணி மெய்க்கவேதேனதி லேமனைவிடைதான்கொள்ள, ஐயப்பாசிரவாழியென்றசெல்லாம்போகு ம நயமாகும்கமென்றுதினத்துப்போமே. ௯௮௭

போமப்பாமேகமென்றசெல்லாம்போகும் பொல்லாதசீதழிவுசிரந் திருக்கடங், தாமப்பாமேகதாமும்விஷபாகங்கள் தருகாதபாண்டுமுதல்ச வாசகாசம், அப்பாநாகச்செந்தூரங்கண்டால் அடங்காதநோய்களெல்லா மடங்கிடும், நாமப்பாசொல்லுகிறோம்வச்சிரகாயம் நல்மனதாயிருந்த வர்க்குளெல்லாஞ்சித்தே. ௯௮௮

சித்தாகஇருக்கவென்றாக்மைந்தாகேளு சிவமானசெந்தூரப்பூரண த்தேறவிடாக்க, பத்தாசையாகப்பணவிடைதான்கொண்டால் பழுக்குமட டாதேகமதில்சட்டைபோகும், வற்றுதசெந்தூரந்திணமுங்கொண்டால்வ யதுசொல்லமுடியாதமைந்தாகேளு, முத்தானமுத்தமெல்லாமுத்தியாகு மோகயில்லைசெந்தூரமுறையைக்கேளே. ௯௮௯

கேளப்பா வெள்ளியிலே நூற்றுக்கொன்று கெடியான வெள்ளிசெம்
பில் நூற்றுக்கொன்று, காளப்பா குடவனிலே நூற்றுக்கொன்று தன்மையி
ல்லாச் செம்புகளில் நூற்றுக்கொன்று, கோளப்பா வாராமல் பழுக்குந் தங்க
க் குறியான தங்கமதையார் தான் காண்பார், ஆளப்பா ஆதியென்ற தங்கந்த
ன்னை அறிந்துகொண்டு தவமதிலே மையறிந்து செய்யே. ௬௬௰

செப்படா தவமதிலே மனத்தை நாட்டு தீர்க்கமுடன் குருபதத்திற்
சேர்ந்து நில்லு, மெய்யடா கற்பமதை விரும்பியுண்ணு விரும்பிமிகவுண்ணை
யிலேறியம்பாரு, கொய்யடா கருவிகளைக் கொய்துப்போடு கூர்மையுடனே
மனதைக் கூர்ந்துபாரு, பையடா மூலமதிலாறுந் தாண்டி பராபரத்தினருள
தனைப் பற்றிப்பாரே. ௬௬௧

பற்றிமிகப் பாரமற் பொருளைக் கண்டு பதுமைபோல் பெருவெளியிலே
பற்றிநின்று, முத்தியில்லா மூடர்களாய்க் கூட்டங்கூடி மோசமென்ற பாச
மதையிழந்துக்கொண்டு, சத்தியென்ற பெண்ணை மிகநிறுத்திக்கொண்டு
சகலஆபரணமிகத் தானே சாற்றி, புத்தியில்லாக் கடத்தைகளைப் பார்த்தாயா
னால் பூரணத்தினது சிரம் வெடித்துப்போமே. ௬௬௨

வெடித்துமிகப் போவதுவு மெத்தநன்றே வேதாந்தப் பதியிற் கமிக
வுகன்றே, படித்துமிக வெல்லையுமே அறிந்துப்பார்த்து பக்குவத்தோடே
யிருந்து பதியில் தாக்கு, வடித்தமெழுகது போல இந்த நூலில் வசனித்தசு
ருக்கெல்லா மனதிற்காரு, விடுத்தபொருள் தனையறிந்து காராவிட்டால் விண்
ணடியுமண்ணாயு விணாய்ப்போமே. ௬௬௩

கருவங்கச் செந்தூரம்.

போகாமலின்னமொரு சேதிகேளு பொன்னான கருவங்கம் வாங்கி
மைந்தா, வாகாக ஆதியந்தக் கருவினாலே மகத்தான வங்கத்துக் கங்கிபூட்டி,
ஆகாமற் புடம்போடக் கட்டிப்போகும் துண்மையுடன் தானெடுத்துக்
கையில் வைத்து சாகாமற் காரமிட்டுருக்கிப்பாரு சக்கரம்போல் கண்விட்
டு ஆடுந்தானே. ௬௬௪

தானென்ற வங்கத்துக்கிடையே நாகந் தயவான தங்கமுடன் ரசமுங்
கூட்டி, கோனென்ற குருவருளாலுருக்கிப்பார்க்க குணமாகவாலு மொன்றா
ய் மணியாய் நிற்கும், மானென்ற கல்வத்தில் நொறுக்கிக்கொண்டு மாட்டமா
ய் சீரமொடு லிங்கங்காணும், தேனென்ற காரமொடு வொன்றாய்க் கூட்டி சிவசி
வா இதுக்கு கெட்டி கெந்திகூட்டே. ௬௬௫

கூட்டினதொன்றாய்ப் பொடித்துமிகக் குப்பிக்கேற்றி குணமான மண்சீலை வ
லுவாய்ப்பூசி, நாட்டியே முன்போல எரித்துவாங்கி நல்லபதமறிய வென்றால்
சலசைபோடு, மாட்டியதோர் சலாகைமுனை வெருத்தானால் மார்க்கமு
டன் தானெடுத்து ஆறவைத்து, காட்டிகமாய்க் குப்பிதனை யுடைத்துப்பார்
க்கத் தங்கநிறமான செந்தூரமாமே. ௬௬௬

பாரப்பா செந்தூரம் பதனை செல்லத்தில் பக்குவமாய்க் குன்றிடை
கொண்டால் மைந்தா, ஆரப்பா வுனக்கிது சொல்லப்போறேன் அரகரா தேக

## மாத்திரை. ௧

ஒழியாமலிருப்பதற்குமாத்திரைதானொன்று உத்தமனேசொல்லு கிறேனென்றாய்க்கேளு, வழியானஅயக்காந்தச்செந்தூரமொன்று மார்க்கமு ளாகச்செந்தூரமொன்று, தெளியாததாளகச்செந்தூரமொன்று நோ னதாம்பிரச்செந்தூரமொன்று, அழியாதவங்கச்செந்தூரமொன்று அப்ப னேஐந்துமோரிடையாய்வாங்கே. ௧௫

வாங்கியேகல்வத்திலிட்டுக்கொண்டு மகத்தானருலைப்பாலும்பழத் தின்சாறும், பாங்குடனேயெண்டுநிறையொன்றாய்ச்சேர்த்து பக்குவமாய்கல வத்திலாட்டும்போது, தாங்கியேதிரிகடுகுமூன்றுமொன்றாய் சரியிடையா ய்ச்செந்தூரங்களிற்சேர்த்து, ஆங்கதுகொண்டேயரைப்பாயாறுநாள்தா ன் அதின்பிறகுமத்தஞ்சாறதனிலாரே. ௧௬

வார்த்தானன்றாயாறுநாளரைத்தபின்பு மார்க்கமுடன்வழித்துமாத்தி ரைகள்செய்து, பார்த்தானன்றாய்நிழலுலர்த்தியெடுத்துக்கொண்டு பக்குவ மாய்குணங்குறிகளறிந்துகொண்டு, சாத்துமிகஅனுபானமறிந்துசெய்தா ல் காணுமேலோடிவிடுஞ்சுவாசநோய்தான், சாறுகிறேன்கலிக்கமொன்று சொல்லக்கேளு தன்மனைத்தானறிந்துனைதாயில்லை. ௧௭

## கலிக்கம்.

தனதானகிராம்புடனேதிரிகடுகுகூட்டி தன்மையுள்ளகிராம்பதுவு ங்கூடச்சேர்த்து, மனதானவாளமொன்றுமெட்டுக்கொன்று மாட்டுவாய்கல வத்திற்பழச்சாறிட்டு, வுளதானஅதின்கூட்டிநன்றாயாட்டி ஊமத்தஞ்சா றதனிலொருநாளாட்டி, சுனதானகையாறுபோலுருட்டிமைந்தா காற்றில்லா விடம்பார்த்துக்காயவைவே. ௧௮

வைத்தானன்றாய்க்காய்ந்தபின்புஎடுத்துக்கொண்டு வரிசையுடன்சொ ல்லுகிறேனென்றாய்க்கேளு, கைத்ததொருமுலைப்பாலாலுரைத்துநாவில் க ண்ணிலிடச்சகலசன்னிகாணுதோடும், மெய்த்தசிவருத்திரகனமாத்திரை வைத்து வேணபடிவயித்தியத்தைநிருப்பிச்செய்தால், சைத்தவொருசா த்தியமசாத்தியம்ரெண்டும் நன்றாகத்திருமடாநலமாப்பாரே. ௧௯

## வேறு—கலிக்கம்.

பாரப்பாகலிக்கமொன்றுசொல்லக்கேளு பக்குவமாய்திரிகடுகுதுரி சிசுத்தம், நேரப்பாஅரிதாரமிந்துப்பேரடு நிலைவாசலோசனியுஞ்சரியாய் த்தூக்கி, காரப்பாபவளமேதுநாலுக்கொன்று கருவாகப்பூக்காற்றுக்கைத் துமைந்தா, நேரப்பாசயறுபோல்திரட்டிக்கொண்டு இவையெல்லாம்நிழலுலர்த்தி பதனம்பண்ணே. ௨௰

பண்ணியதோர்கலிக்கமாத்திரையைமைந்தா பக்குவமாய்மெய்ம்ஞ ளிலேபதனம்பண்ணி, உண்ணிலேமுலைப்பாலாற்கண்ணிலீற்றி உறுதியு ள்ளஜன்னிமுதல்விஷங்கள்போகும், நன்னிமேதோர்குளிக்கமுமாடா

ரோடும் நலமில்லா நெஞ்சடைப்புமூர்ச்சைபோகும், பண்ணியவெழு வாஸகலிக்கப்பா புனிதமுடன்பதனமதாய்வைத்துப்போற்றே. ௩௱௧௧

போற்றப்பாநீர்தோஷங்கபாலகுலை புகைச்சலென்றகண்புகைச்சல் காதுமாந்தம், பார்த்தப்பாமூக்கடைப்பன்கண்டமாலை பவுத்திரமோதர முங்குஷ்டங்குன்மம், ஆற்றப்பாபோவதற்குமருந்துசொல்வேன் அன்பா னசாதிக்காய்சாதிபத்திரி, மாற்றப்பாமதுரமதிவிடையம்மேயம் மாத்தா னதிரிகடுகுசினங்கூட்டே. ௩௱௧௨

கூட்டியேசரியிடையாய்வாங்கிக்கொண்டு குணமாகச்சூரணித்தமு ப்பூச்சேர்த்து, நாட்டியேதேனதிலேகொண்டால்மைந்தா நலமாகநான் சொன்னவியாதிதீரும், தேட்டிலேயிந்நூலைத்தேடவேணுந் திறமாசப்ப னிவன்றிங்காக்கவேணுந், தாட்டிகமாய்க்கற்பமதைக்கொள்ளவேணுந் த னதானபூரணத்தைமருவிப்பாரே. ௩௱௧௩

பாரப்பாபூரணமாம்பக்ஷைபக்ஷைபகாசதபக்ஷைதனைப்பதிவாய்ப்பார் க்க, ஆரப்பாஅறிவார்கள்காரசாரம் அப்பாக்கின்ற ரசமதையார்தான்கா ண்பார், தேரப்பாமனதறிவால்தேறிக்கொண்டு தெளிவிட்டாதபூரணத்தை ப்பணிந்தால்மைந்தா, நேரப்பாமதுரரசஞ்சொலிக்கும்பாரு நினைவாகஅ முர்தமதைப்பானம்பண்ணே. ௩௱௧௪

காயாதிகற்பமூன்றுப்பக்குவம்.

பண்ணப்பாகாயாதிகற்பங்கொள்ள பக்குவத்தைச்சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு, விண்ணப்பாஆதியர்தநடுமூன்றாக விளங்குகின்றபொ ருளதனைவிரும்பிக்கேளு, நண்ணப்பாஅமுதகற்பம்அகாரபீட சிவான போதமடாஆர்தான்காண்பார், உண்ணப்பாஅகாரமென்றபொருளைக்கே ளு வுறுதியுள்ளபுலத்தியனேயுண்மைதானே. ௩௱௧௫

தானென்றஅகாரமடாவிந்துவிந்து தன்மையுள்ளவிந்துநீர்தன்னி ராச்சு, கோனென்றவிந்துநீர்தன்னைவாங்கி குணமாகஅந்திரத்திக்கொண்டு மைந்தா, கோனென்றகுருபதத்தில்மனதைவைத்து குணமாகவேசபூரக மும்பண்ணி, நானென்றஅகம்போக்கிரும்பசத்தேதின்றால் நலமில்லாதே கம்வெகுவுறுதியாமே. ௩௱௧௬

ஆமப்பாவுறுதிமனதுறுதியாக அப்பனேகொண்டிடுவீரானால் சக்கா ன், நாமப்பாஸ்தபித்தசேகதுமத்தினாலே நாடுவாருயியாதிவெல்லாம்நா டாதேதாமும், போமப்பாஜரையோடுதிரையும்போகும் பொல்லாததிரேக மையின்மாய்கைபோகும், தாமப்பாநந்திஒளிபிரகாசிக்குந் தயவாகப்போ கும்வெகுதண்மைதானே. ௩௱௧௭

தானென்னநீயென்னரெண்டுமொன்று தடையில்லாமனதாகஇருந் தாயானால், சோனென்னகுருவென்னநீயேயாகும் குணமானமனதுறுதி யானதாலே, ஆனென்னபெண்ணென்னரெண்டுமொன்று அகாரமனை திடமிடறிவிற்சேர்த்து, தேனென்னவக்ரதொருவிந்துசேர தெளிவட்டமாய் மற்கொண்டுபெறுமற்பநிக்கிடே. ௩௱௧௮

கேளப்பாநடுவான அகாரந்தொட்டு கிருபையுடனடியோனஉகாரத்தே
று, நாளப்பாஉகாரமென்றஅடிதான்மூல நலமானமூலமென்றுலார்தான்
காண்பார், கோளப்பாவொன்றுமில்லைநாசம்நாதன் குருவானமவுனமதை
க்கூறப்போமோ,வாளப்பாநாதமென்றசருநுவாங்கிலைக்கனேதிணக்கோ
றம்பூசிப்பாயே. ௲௪௯

பூசிப்பாய்நாதமென்றசருகுவாங்கி புசமூரகோசபூரகமும்பண்ணி,
நேசிப்பாய்கும்பகத்திலமனதைநாட்டி நினைவாகமனதூறுதியாகக்கொண்
டால், ஆசிப்பாவாசிப்பாமூகதிப்பாரு அழகத்திரேகபார்க்கைவிலேயரு
ளேதோன்றும், வாசிக்குமுயிரானவகாரந்தன்னை வரிசையுடன்பூசிக்கும்
வகையைக்கேளே, ௲௫௰

பூசிக்கும்வகை.

கேளப்பாவகையாதிசிவத்தைப்பூசி கெளரிசமரம்மதியமதில்போ
சனையேசெய்து, நாளப்பாமாலைதனில்உசாதிட்சை நன்மையுள்ளசத்தி
யைநீபூசைபண்ணு, காளப்பாமூலமுதலாறுகாரந் தான்கடந்துமேலான
சுழிமுனைக்குள்ளே ஆளப்பாஅண்டபகிரண்டமெல்லாம் அகாரஅகாரமு
டன்உகாரந்தானே. ௲௫௧

தானப்பாஅகாரமென்றசத்திதன்னை தன்மையுடன்மண்டலமேபூ
சித்தாக்கால், தேனப்பாஅமுர்தசசத்தனிற்றுசானும் சிவசிவாஅமுர்தாச
மந்தமாகும், பேணப்பாஉகாரமென்றஅமுர்தாசந்தன்னை பிலத்தபுத்திய
றிவதினாற்பேணிப்பார்த்து,வூணப்பாமூலமதில்ரேசகமேபண்ணி உம்மெ
னவேநடுவணையில்பூரகமேசெய்யே. ௲௫௨

செய்யப்பாநடுவணையில்பூரகமேசெய்து திடமாகமேல்மூலஞ்சேர்
த்துக்கொண்டு,பையப்பாகும்பகத்திற்பற்றிபாரு பருதிமதிசுடரொளியில்
பருந்தேகில்லு, கையப்பாதடவுவதுபோலேமக்காள் கருணாகசத்தியை
நீகருத்தில்வைத்தால்,மெய்யப்பாவுனதுசெடம்வலுத்துப்போச்சு மேதி
னியில்சித்தனென்றபேருமாச்சே. ௲௫௩

ஆச்சப்பாசித்தனிலேஅதிகசித்தன் ஆதியென்றமூலமதைப்புரிந்த
தாலே, போச்சப்பாநரைதிரையும்மரணமில்லை பொன்போலேபூரணமாந்
தேகமாச்சு, பாச்சப்பாவாசியைநீவாசிகண்டு பக்குவமாய்மதியைவெள்ள
ரவியிற்சேரு, காச்சப்பாபஞ்சமுகாக்கினியினாலே கருத்துறவேசெடத்
தைமெள்ளக்காச்சுகாச்சே. ௲௫௪

காச்சுதற்குஅக்கினியில்கருணைச்சொன்னேன் கருத்துறவேசிவபூ
சைநன்றாய்ச்சொன்னேன், பாச்சுதற்குசத்தியுடபூசைசொன்னேன் பத்
தியுடன்பகுத்தறியாய்ப்புத்திகொண்டு, மூச்சுதற்குமுன்னிலைதான்பீட
மாகும் முனையானசுழிமுனையேவகாரபீடம், பேச்சுதற்குபேசுதற்குநா
வேயில்லை பெருமையுடன்சத்திசிவபூசைகேளே, ௲௫௫

சத்திசிவபூசை.

கேளப்பாசத்தியென்றஉகாரந்தன்னில் கிருபையுள்ளஅகாரமென்ற
சிவத்தைநாட்டி,நாளப்பாதினப்பார்த்துநமசியென்றே நன்றாகசிவசத

செய்யப்பாகும்பகத்தில்மனதைவைத்துசெயயானபற்பமதில்பணவிடைதானெடுத்து, மெய்யப்பாசொல்லுகிறேன்சற்குருவைப்பற்றி மேரைபற்பமதுகொண்டால்மைந்தா, பையப்பாதேகமதுவலுத்துப்போகும் பாருதனில்வெகுகோடிகாலம்வாழும், ஐயப்பாவென்றசொல்லசன்னுமோரு மகராமனையென்றஅமுதமாமே. ௲௪௧

## அமுர்தாசகற்பம்.

ஆமப்பா அமுர்தாசகற்பமொன்று அன்பானபுலத்தியனேசொல்லக்கேளு, தாமப்பா அடிமுடியுமொன்றாய்ச்சேர்த்து சமர்த்தாகபாண்டத்திலிட்டுக்கொண்டு, நாமப்பா குழிக்குவிலங்கன்றாய்வாங்கி நன்றாகக்குப்பிதனிலபதனம்பண்ணி, காமப்பாவிபிசம்பொடித்துள்ளிட்டு கமலமென்றபீக்கானில்பதனம்பண்ணே. ௲௪௨

பண்ணியதோர்நாவிலமதப்பணவிடைதானெடுத்து பத்தியுடனிருபொழுதுமண்டலந்தான்கொள்ள, உண்ணியதோர்வியாதியெல்லாமோடிப்போகும் உத்தமனேயாக்கைதனில்சட்டைதள்ளும், நன்னையமாய்த்தேகமதிற்காந்திமீறி ரவிபோலவொளிவீசும்நாட்டங்காணும், புண்ணியனே அமுர்தாசதேகமாகும் புத்திமிகவுண்டாகும்புனிதமாமே. ௲௪௩

## மேருகற்பம்.

ஆமப்பா இன்னமொருகற்பங்கேளு ஆண்டுமொருபூவாதகாரையவாங்கி, போமப்பாகல்லுரலிலிடிப்புக்கொல்ல புத்தியுடன்மைபோலஇடிக்கக்கொண்டு, தாமப்பாஇழுசிறிக்கரைத்துக்கொண்டு தப்பாமல்மறுதினத்திலிலுத்துப்போடு, காமப்பாபதமுறைப்படியேபண்ணி நன்றாகவிழுகத்திலுலர்த்திடாயே. ௲௪௪

உலர்த்தியன்றாய்முன்போலவிடித்துத்தோண்டி உத்தமனேவிழுகத்திலாயப்போடு, கழுத்திமிகநன்றாகக்காய்ந்தபின்பு கருக்காகவுரலிலிட்டிடைபோலக்கி, இடித்திமிட்டுநன்றாகக்கரைத்துமியுந் தெளியவைத்துத்தெளிவிழுந்திஜலத்தையாறு, மேலத்துடனிப்படிபத்துமுறைபண்ணிப்பெளியேவிழுகத்திற்காயப்போடே. ௲௪௫

போட்டுநன்றாயுலர்த்தியுக்காய்ந்ததானால் புனிதமுடன்மைப்போலிடித்துக்கொண்டு, காட்டமுடன்வடிகட்டிமேருக்கேற்றி கடாசர்சக்கரத்தைநன்றாய்க்கிறி, நாட்டிகமாயதின்மேலேமேருவைத்து சமர்த்தாக ஞானம்பூசைபண்ணி, வாட்டமில்லாமலொருதிரியில்மனதைவைத்து மகத்தானமேருவைப்பதனம்பண்ணே. ௲௪௬

பதனமதாய்மேருவைவைத்துப்போற்றி பராபரமாங்கேசரத்தில் மனதைவைத்து, சதமாகப்ரேசகபூரகமும்பண்ணி தன்மையுடன்கும்பகத்திற்சார்ந்துநின்று, மிதமாகப்பணவிடைதானெடுத்துமைந்தா மிகுசாபலதுள்ளியிட்டுக்கொண்டாயானால், அதமானதேகமதுவச்சிரம்போலாம அப்பனேமண்டலத்திற்சட்டைபோமே. ௲௪௭

றுக்கேனுர்விட்டு, காச்சப்பாபிரைசக்தாவிமுகத்தில்வைக்கக் கருவான
மெழுகாகுமஞ்சாநாளில்,பேச்சப்பாபேசுதற்குநாவுமுண்டோபேணியே
பாணிதனில்பதனம்பண்ணே. ௯௯௫

பண்ணியதோர்மெழுகுதன்னில்பணவிடைதாமெடுத்து பரமான
குருபதத்தைப்பணிந்துபோற்றி, உண்ணியேமூலமதில்மனதைவைத்து
ஓடிமனமேவொருமனதாய்க்கொண்டால்மைந்தா, கண்ணிமைக்குள்மூலமெ
ன்றவன்னிமீறிக் காட்டுமடாகற்பூரதீபங்கன்னே, சென்னிவளர்தீபமதைக்
கண்டால்மைந்தா தேகசித்தியோகசித்திஞானமாமே. ௯௯௬

ஆமப்பாஞானமென்றால்மெய்ஞ்ஞானமாகும் அப்பனேமெய்ஞ்ஞா
னங்காணவென்றால், நாமப்பாசொல்லுகிறேன்நீவாய்கேளு நலமானசரி
தையிலேநின்றுதேறி, தாமப்பாகிரியையிலேசார்ந்துகொண்டு தயவான
மனதோடேயிருந்தாயாகில், காமப்பால்சானற்பால்கொண்டுகொண்டகயி
லாசசற்குருவும் வருவார்பாரே. ௯௯௭

வருவார்கள்வெகுவிதமாய்மானதுகாணவாந்தனைபெரியோனைக்கொ
ண்டம்பண்ணி, பருவமுடனவர்பதத்தைப்பணிந்துகொண்டு பக்குவமா
ய்மனதுருகநடந்தாயாகில், குருவானசற்குருவந்தாண்டுகொண்டு அவரம்
பார்க்கவுன்னிடத்திலிருப்பாரையா, கருவாகமனம்பதியநடந்துகொண்
டால் காட்டுவாராதியந்தக்கருவைத்தானே. ௯௯௮

அகஸ்தியர்தன்வரலாறுரைத்தல்.

தானெனநான்பெற்றபேறைக்கேளு சத்தியமாய்மேருவுச்சந்திதன்
புறத்தில், தேனெனாசமொழுகிஅருவிபாயுந் தெவிட்டாதஅருவிதனைக்க
ருவிலேதான், கோனெனபிரமகுலராஜயோகி குருவானசற்குருவாமாதிபர
ன,மானெனமவுனசமவுனமான மகத்தானபிரமகுலவேதியோனே. ௯௯௯

வேதியனைக்காக்குமுன்னேமனந்தான்தேறி விரும்பிமிகக்கர்ப்பம
தைமேவிக்கொண்டு, ஆதியிலேபிறந்தசடமழியாமல்தான் அகத்தியனுட
செயலறிந்துஅறிவார்கூடி, நீதியுடன்சஞ்சாரசமாதிசெய்து நோனகிலே
யறிந்துஇருக்குமப்போ,சோதியெனுஞ்சற்குருதான்வந்தாரப்போசொல
வறியவேணுமெனஅடுத்தேன்பாரே. ௲

பாரப்பாஅடுத்துமிகச்சென்றேனப்போ பரிவாகஎன்குருவும்வாவா
வென்றார், நேரப்பாநின்றகுருவாலேநாதம் நெஞ்சாரக்கேட்டவுடன்நேர்
மையாக, மாரப்பாமனமெழுந்தப்பணிந்தேனப்போ மனமகிழ்ந்துஅருவி
யிலேயிருந்துக்கொண்டு,தேரப்பாதசதீட்சைவைப்பதற்கு திடகத்திசெ
ய்ததொருதிரத்தைக்கேளே. ௲௧

கிரமாகப்பஞ்சகணதீட்சையாலே தீர்க்கமாயெக்கியக்கால்வளர்த்தா
ரையா, வரமாகஎக்கியம்வளர்குண்டந்தன்னில் உறுதியுடன்கும்பமொன்
றுவைத்திருந்தையா, பரமானகும்பமதிலேயேன்தன்னை பாவென்றார்சொன்
னவுடன்பாய்ந்தேனப்போ, நிறமானகும்பமதுவாலேயாச்சுதேதியுள்ளவா
லேயடாகும்பப்பெண்ணே. ௲௨

